නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2020
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2020
General Certificate of Education (Adv. Level) Examination, 2020

ක්‍රිස්තියානි ධර්මය I
கிறிஸ்தவம் I
Christianity I

43 T I

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
Two hours

**அறிவுறுத்தல்கள்:**

* **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
* விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.
* விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.
* **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய விடைத்தாளில் புள்ளடி** (X) இடுவதன் மூலம் காட்டுக.

**1.** யூதர்களும் கிறிஸ்தவர்களும் ஏற்றுக்கொள்வதன்படி பழைய ஏற்பாட்டு நூல்களின் எண்ணிக்கை யாது?
(1) 36 (2) 37 (3) 39 (4) 46 (5) 48

**2.** பழைய ஏற்பாட்டில் குறிப்பிடப்பட்டுள்ளவர்களுள் வீரம்மிக்க தலைவர்
(1) கிதியோன் (2) ஆரோன் (3) யூதா
(4) லேவி (5) ஆமோஸ்

**3.** இஸ்ராயேலின் வட அரசில் 'சமாரியர்' என்னும் மக்கள் இனம் உருவாகியமைக்குக் காரணம்,
(1) இஸ்ராயேலர் சிலர் அசிரியாவில் குடியேறியமையாகும்.
(2) இஸ்ராயேலர் சிலர் பபிலோனியாவில் குடியேறியமையாகும்.
(3) அசிரியாவிற்கு நாடுகடத்தப்பட்ட வடபகுதியினர் மீண்டும் தமது நாட்டிற்குத் திரும்பி வராமையாகும்.
(4) இஸ்ராயேலில் எஞ்சியவர்களுக்கும் அசிரியாவில் குடியிருந்த வேறு தெய்வ வழிபாட்டில் ஈடுபடுவோருக்கும் இடையில் நடைபெற்ற கலப்புத் திருமணமாகும்.
(5) பபிலோனியாவில் குடியிருந்தவர்களுக்கும் இஸ்ராயேலில் எஞ்சியவர்களுக்கும் இடையில் நடைபெற்ற கலப்புத் திருமணமாகும்.

**4.** திருவிவிலியத்திற்குரிய சில நூல்களின் சோடிகள் கீழே தரப்பட்டுள்ளன. அவற்றுள் ஐந்நூலுக்குரிய நூல்களின் சோடி எது?
(1) யோசுவா, நீதிபதிகள் (2) ரூத, எஸ்தர்
(3) விடுதலைப் பயணம், எண்ணிக்கை (4) நெகெமியா, எஸ்தர்
(5) ஒபதியா, யோனா

**5.** படைப்பு தொடர்பான முதற்கதை அடங்கிய முதற்பிரதியில் சூரியனும் சந்திரனும் பெயரிடப்படவில்லை. அதற்கான காரணம்,
(1) இந்த ஏழு நாட்களின் முடிவில் சூரியனும் சந்திரனும் படைக்கப்பட்டமையாகும்.
(2) சூரியன், சந்திரனுக்கான பெயர்கள் அக்காலத்தில் பயன்படுத்தப்படாமையாகும்.
(3) படைப்புச் செயல் ஆரம்பிக்கப்படுவதற்கு முன்னர் சூரியனும் சந்திரனும் காணப்பட்டமையாகும்.
(4) பல தெய்வ வழிபாட்டுச் சூழலில் பல தெய்வ வழிபாட்டுக்கு எதிராக அக்கதை எழுதப்பட்டமையாகும்.
(5) சூரியன், சந்திரன் ஆகியவற்றுக்குப் பதிலாக பெரிய ஒளிப்பிழம்பு, சிறிய ஒளிப்பிழம்பு ஆகிய பெயர்களின் பயன்பாடு இலகுவாகக் காணப்பட்டமையாகும்.



[பக் 2 ஐப் பார்க்க

6. மனிதன் இறைசாயலாகப் படைக்கப்பட்டதன் மூலம் அவன் படைப்புத் தொழிலில் பங்காளியாக முழு உலகையும் ஆளுவதற்கு அழைக்கப்பட்டான். இங்கு ‘ஆளுதல்’ (எபிரேய ‘றதா’) என்னும் வினைச்சொல்லினால் விளக்கப்படுவது
(1) பாதுகாத்துக் கொள்ளல்
(2) அடிமைப்படுத்திக் கொள்ளல்
(3) அதிகாரத்திற்குட்படுத்திக் கொள்ளல்
(4) முதல் பெற்றோருக்குக் கிடைத்த அதிகாரம்
(5) தேவைக்காக மிருகங்களைக் கொல்வதற்கான அனுமதி

7. வரலாற்றிற்கு முற்பட்ட காலத்தில் மனிதன் கடவுளைப் பிரிந்து சென்றமை உச்சகட்டத்தை அடைந்த பின்னர் மீண்டும் மனிதன் அப்பயணத்தை எதிர்த்திசை நோக்கித் திருப்பும் செயற்பாடு ஆரம்பித்தது
(1) நோவாவுடனாகும். (2) ஏசேயுடனாகும். (3) ஈசாக்குடனாகும்.
(4) யாக்கோபுடனாகும். (5) ஆபிரகாமுடனாகும்.

8. இறைவன் ஈசாக்கு, யாக்கோபு போன்ற தலைவர்களைத் தெரிவுசெய்து கொண்டமைக்கான பிரதான காரணமாயமைந்தது
(1) அவர்கள் அஞ்சாதவர்களாகக் காணப்பட்டமையாகும்.
(2) இறைவனின் அன்பாகும்.
(3) அவர்கள் பெற்றிருந்த வாழ்க்கை அனுபவமாகும்.
(4) அத்தலைவர்களின் புனிதத்துவமாகும்.
(5) அவர்கள் ஆபிரகாமின் தலைமுறையினராக இருந்தமையாகும்.

9. மேசேயும் ஆரோனும் பார்வோனைச் சந்திக்க அதிகாலையில் ஆற்றை நோக்கிச் செல்லும் வழியில், பார்வோனைச் சந்தித்து இஸ்ராயேல் மக்களுக்குப் பாலைநிலத்தில் இறைவனை வழிபட இடமளிக்குமாறு கேட்டனர். இருப்பினும் அனுமதி கிடைக்காததால் ஏற்படுத்திய பெரும் துன்பங்களாவன
(1) 1, 4, 7 ஆகியனவாகும். (2) 2, 5, 8 ஆகியனவாகும்
(3) 3, 6, 9 ஆகியனவாகும். (4) 4, 6, 10 ஆகியனவாகும்.
(5) 5, 6, 8 ஆகியனவாகும்.

10. பாஸ்கா செம்மறி கொல்லப்பட்டது எந்த நேரத்திலாகும்?
(1) மு.ப. 6.00 - பி.ப. 3.00 இற்கு இடையிலாகும்.
(2) மு.ப. 6.00 - பி.ப. 4.00 இற்கு இடையிலாகும்.
(3) மு.ப. 6.00 - பி.ப. 6.00 இற்கு இடையிலாகும்.
(4) மு.ப. 9.00 - பி.ப. 3.00 இற்கு இடையிலாகும்.
(5) மு.ப. 9.00 - பி.ப. 4.00 இற்கு இடையிலாகும்.

11. பாலைநிலப் பயணத்தில் இறைவன் காட்டிய மரத்துண்டை தண்ணீரில் இட்டு உவர்ப்பு நீரை சுவையுள்ள நீராக மாற்றிய இடம்
(1) மஸ்சா (2) மெரிபா (3) மாரா (4) டிம்சா (5) சிரியோனஸ்

12. முதற் தடவையாக மெசியா பற்றிய இறைவாக்கினை அறிவித்த இறைவாக்கினர் யார்?
(1) நாத்தான் (2) எசாயா (3) எலியா (4) யோவேல் (5) ஆமோஸ்

13. பின்வரும் இறைவாக்கினர்களில் ஒருவரின் பெயரின் பொருள் ‘இறைவன் மீட்கிறார்’ என்பதாகும். அந்த இறைவாக்கினர் யார்?
(1) எலியா (2) எரேமியா (3) நாத்தான் (4) ஆமோஸ் (5) எசாயா

14. தெகிலீம் பாடல்களுக்குத் தொடரிலக்கங்கள் இட்டபோது பழைய ஏற்பாட்டின் எபிரேய பிரதிக்கும் கிரேக்க பிரதிக்கும் இடையே ஒரு தெகிலீம் பாடலில் வேறுபாடு இருந்தது. அதற்கான காரணம் எபிரேய பிரதியில் ஒரு பாடலாகக் கொள்ளப்பட்ட பாடல் கிரேக்க பிரதியில் இரு பாடல்களாகக் கொள்ளப்பட்டமையாகும். அந்த இரு பாடல்களும் யாவை?
(1) இலக்கம் 7, 8 (2) இலக்கம் 8, 9 (3) இலக்கம் 9, 10
(4) இலக்கம் 10,11 (5) இலக்கம் 11, 12

15. தேவாலய வரி ஷெக்கேல் நாணயமாகச் செலுத்தப்பட்டமைக்கான காரணம்,
(1) அவற்றை நீண்டகாலம் வைத்திருக்க முடியுமாய் இருந்தமையாகும்.
(2) ஷெக்கேல் நாணய கொடுக்கல் வாங்கல் இலகுவானதாய் இருந்தமையாகும்.
(3) ஷெக்கேல் நாணயம் பெறுமதியில் கூடியதாகக் காணப்பட்டமையாகும்.
(4) உரோமை நாணயத்தில் சீசரின் உருவம் பதிக்கப்பட்டிருந்தமையாகும்.
(5) வேறு நாணய அலகுகளுக்கு மாற்றுவது இலகுவானதாகக் காணப்பட்டமையாகும்.



[பக் 3 ஐப் பார்க்க

16. தற்போது ஏற்றுக்கொள்ளப்பட்ட பெரும்பான்மையோரின் கருத்துப்படி, புனித லூக்கா நற்செய்தி எழுதப்பட்ட காலம்,
(1) கி.பி. 60 - 70 இற்கு இடைப்பட்டது. (2) கி.பி. 65 - 75 இற்கு இடைப்பட்டது.
(3) கி.பி. 70 - 80 இற்கு இடைப்பட்டது. (4) கி.பி. 75 - 85 இற்கு இடைப்பட்டது.
(5) கி.பி. 80 - 90 இற்கு இடைப்பட்டது.

17. திருத்தூதர்பணி நூலில் எவ்வளவு காலப்பகுதியின் தகவல்கள் உள்ளடக்கப்பட்டுள்ளன?
(1) 20 வருடங்கள் (2) 25 வருடங்கள் (3) 30 வருடங்கள்
(4) 35 வருடங்கள் (5) 40 வருடங்கள்

18. புதிய ஏற்பாட்டில் மீட்பின் வரலாற்றை வெளிப்படுத்தும் நூல்
(1) கொரிந்தியருக்கு எழுதிய திருமுகம் (2) திருத்தூதர்பணி நூல்
(3) திருவெளிப்பாட்டு நூல் (4) உரோமையருக்கு எழுதிய திருமுகம்
(5) மாற்கு நற்செய்தி

19. இயேசு காட்சி கொடுத்த பின்னர், புனித பவுலின் மீது யார் கைகளை வைத்ததால் அவர் மீண்டும் பார்வை பெற்றார்?
(1) அக்கிலா (2) புனித பேதுரு (3) கொர்னேலிஸ்
(4) பர்னபா (5) அனனியா

20. சிரியாவின் அந்தியோக்கியாவில் நிலவிய யூத, யூதரல்லாத அங்கத்தவர்களையுடைய கலப்புச் சபையில் பணியாற்றுவதற்கு புனித பவுலுக்கு யார் மூலமாகச் சந்தர்ப்பம் கிட்டியது?
(1) அனனியா (2) பர்னபா
(3) யோவான், மாற்கு (4) தியாதிராவின் லிதியா
(5) அக்கிலா, பிறிஸ்கில்லா

21. புனித பவுலின் முதலாவது மறைதூதுப் பயணத்தின் நோக்கம்
(1) புதிய சபைகளின் வளர்ச்சியை அறிதலும் தேவையான அறிவுரைகளை வழங்குதலுமாகும்.
(2) புதிய சபைகளின் உறுப்பினர்களுக்கு அறிவுரை வழங்குதலும் உற்சாகப்படுத்துதலுமாகும்.
(3) விசுவாசிகளை கிறிஸ்தவ விசுவாசத்தில் வலிமைப்படுத்துதலும் உற்சாகப்படுத்துதலுமாகும்.
(4) எருசலேம் பொதுச்சங்கத்தின் தீர்மானங்களை ஏனைய சபைகளுக்கு அறிவித்தலாகும்.
(5) அந்தியோக்கியாவின் சபையில் தூய ஆவியாரின் வழிகாட்டலை உறுதி செய்துகொள்ளலாகும்.

22. புனித பவுலுக்குக் கல்லெறிந்து அவரைக் கொன்றதாக எண்ணி அவரை நகரிலிருந்து வெளியே இழுத்துப் போட்டது,
(1) தெருபையில் ஆகும். (2) இக்கோனியாவில் ஆகும்.
(3) பம்பிலியின் பெருகையில் ஆகும். (4) லிஸ்திராவில் ஆகும்.
(5) பிசிதியாவிலுள்ள அந்தியோக்கியாவிலாகும்.

23. புனித பவுலுக்கு அக்கிலா, பிறிஸ்கில்லா ஆகியோரைச் சந்திக்க நேர்ந்தது
(1) கொரிந்தியில் ஆகும். (2) பெருகையில் ஆகும். (3) பினீசியில் ஆகும்.
(4) கலாத்தியில் ஆகும். (5) தெருபையில் ஆகும்.

24. கிறிஸ்துநாதர் தமது திருத்தூதர்களாகத் தெரிவுசெய்து கொண்ட பன்னிருவரில் சாதாரண மக்கள் சமூகத்தைச் **சேராதவர்கள்** இருவரும்,
(1) யாக்கோபுவும் யோவானுமாவர். (2) மத்தேயுவும் பார்த்தலோமேயுமாவர்.
(3) சீமோனும் அந்திரேயுமாவர். (4) பிலிப்புவும் தோமாவுமாவர்.
(5) சீமோனும் யூதாததேயுசுமாவர்.

25. மறுபிறவி பற்றி நற்செய்திகளில் குறிப்பிடப்பட்டுள்ள முதலாவது காரணி எது?
(1) எம்மாவுஸ் பயணத்தில் காட்சி கொடுத்தல்
(2) புனித தோமாவிற்குக் காட்சி கொடுத்தல்
(3) திருத்தூதர்களுக்குத் தோன்றுதல்
(4) மீன்களைப் பிடித்த புதுமை
(5) வெறுமையான கல்லறை



[பக் 4 ஐப் பார்க்க

**26.** மாற்கு நற்செய்தியில் குறிப்பிடப்பட்டுள்ள,“என் அன்பார்ந்த மகன் நீயே, உன்பொருட்டு நான் பூரிப்படைகிறேன்” என்ற வெளிப்பாடு, பழைய ஏற்பாட்டு நூல்கள் இரண்டிலிருந்து ஒன்றுசேர்க்கப்பட்டவையாகும். அந்த இரண்டு நூல்களுமாவன
(1) நீதிமொழிகள், எரேமியா ஆகியனவாகும்.
(2) திருப்பாடல்கள், எரேமியா ஆகியனவாகும்.
(3) திருப்பாடல்கள், எசேக்கியேல் ஆகியனவாகும்.
(4) ஏசாயா, எரேமியா ஆகியனவாகும்.
(5) திருப்பாடல்கள், ஏசாயா ஆகியனவாகும்.

**27.** இயேசு, திவ்விய நற்கருணையை ஏற்படுத்தியது தொடர்பான சமநோக்கு நற்செய்தி அறிக்கைகள் மூன்றுக்கு மேலதிகமாக அறிக்கையிடப்பட்டிருப்பது
(1) பிலிப்பியர் திருமுகத்திலாகும். (2) உரோமையர் திருமுகத்திலாகும்.
(3) 1 கொரிந்தியர் திருமுகத்திலாகும். (4) எபேசியர் திருமுகத்திலாகும்.
(5) 2 கொரிந்தியர் திருமுகத்திலாகும்.

**28.** கொரிந்திய சபையில் திவ்விய நற்கருணை விருந்திற்கு முன்னர் வழக்கமாக நடைபெற்ற செயற்பாடு
(1) ஏழைகளுக்குக் கொடுக்கப்படும் உணவு விருந்து
(2) உடல்ரீதியாக ஆயத்தமாகும் சடங்கு
(3) நன்றி கூறும் உணவு விருந்து
(4) ஒரு சந்தி அனுசரித்தல் சடங்கு
(5) ஒன்றிப்பின் / அன்பின் விருந்து

**29.** ஆரம்பகாலத் திருச்சபையில் நியமிக்கப்பட்ட திருத்தொண்டர்கள் சமூகப் பணிகளில் ஈடுபட்ட அதேவேளை, புனித ஸ்தேவானும் பிலிப்புவும் நிறைவேற்றிய இரண்டு பணிகளாவன,
(1) பந்தியில் பரிமாறுதலும் நோயாளர்களைப் பராமரித்தலும் ஆகும்.
(2) நற்செய்தியைப் போதிப்பதும் திருமுழுக்குக் கொடுப்பதும் ஆகும்.
(3) பந்தியில் பரிமாறுதலும் மறையைப் போதிப்பதும் ஆகும்.
(4) மறையைப் போதிப்பதும் வழிபாட்டுச் சடங்குகளை நிறைவேற்றுவதும் ஆகும்.
(5) ஏழைகளுக்கு உதவுவதும் அமைதியைப் பேண உழைத்தலும் ஆகும்.

**30.** பேரரசன் மாற்குஸ் அவுரேலியன் காலத்தில் மறைச்சாட்சிகளானவர்கள்
(1) புனித ஜஸ்டின், புனித அக்னஸ், திருத்தந்தை புனித பீலிக்ஸ் ஆகியோராவர்.
(2) புனித பெலிகார்ப், பினித லூசியா, புனித செபஸ்தியார் ஆகியோராவர்.
(3) புனித பிபியன், புனித அகத்தா, புனித அலெக்சாண்டர் ஆகியோராவர்.
(4) புனித இரனேயுஸ், புனித பெர்பத்துவா, புனித லவுரேன்சியார் ஆகியோராவர்.
(5) புனித ஜஸ்டின், புனித சிசிலியா, புனித பெலிகார்ப் ஆகியோராவர்.

**31.** தேசியுஸ் பேரரசனின் காலத்தில் உரோம தெய்வங்களினதும் பேரரசனினதும் சிலைகளுக்குப் பலி ஒப்புக்கொடுப்பதற்கும் அச்சிலைகளினால் சித்திரிக்கப்படுபவர்களை தெய்வங்களாகக் கருதி வணங்குவதற்கும் தமது விருப்பத்தைத் தெரிவித்து, பேரரசின் மக்கள் அனைவரும் கட்டாயமாகப் பெற்றுக்கொள்ள வேண்டிய சான்றிதழ் எது?
(1) சபாத் நாள் சான்றிதழ் (2) லிபெலூஸ் சான்றிதழ்
(3) மிலான் சாசன சான்றிதழ் (4) செனட்ரீன் சபை சான்றிதழ்
(5) செனட் குழுவினால் விநியோகிக்கப்படும் சான்றிதழ்

**32.** கி.பி. 313 இல் மிலான் சாசனத்தை வெளியிட்டவர் யார்?
(1) கலேரியன் (2) லிசினியஸ் (3) கொன்ஸ்தாந்தின்
(4) மக்சிமினஸ் (5) மக்சன்டியுஸ்

**33.** இலத்தீன் தந்தையர்களின் பிரிவைச் சேர்ந்தவர் யார்?
(1) புனித பெரிய பசில் (2) புனித அகஸ்தீன்
(3) புனித அத்தனாசியார் (4) புனித ஜோண் கிறிசோஸ்தம்
(5) புனித நசியானசிஸ் கிரகோரியார்

**34.** கி.பி. 412 இல் அலெக்சாந்திரிய ஆயராக நியமிக்கப்பட்டு, சிலை வழிபாட்டு நம்பிக்கைகளுக்கும் பிழையான கோட்பாடுகளுக்கும் எதிராகப் போராடியவர் யார்?
(1) புனித சிறில் (2) புனித அத்தனாசியார்
(3) புனித தேர்த்துல்லியன் (4) புனித அகஸ்தீன்
(5) புனித ஜெரோம்

[பக் 5 ஐப் பார்க்க

**35.** "மறைசாட்சிகளின் இரத்தம் கிறிஸ்தவர்களை உருவாக்கும் வித்தாகும்" என்ற பெறுமதிமிக்க கூற்றை தமது அனுபவ வாயிலாக வெளிப்படுத்தியவர்

(1) புனித அம்புறோஸ் (2) புனித ஓரிகன்
(3) புனித ஜெரோம் (4) புனித சிறில்
(5) புனித தேர்த்துல்லியன்

**36.** மரியாள் தேவ தாய் என்பதை உறுதிப்படுத்துவதற்குக் காரணமாயமைந்த **தவறான** கொள்கையை முன்வைத்தவர் யார்?

(1) நெஸ்தோரியுசால் (2) இயுத்திக்கேஸ் (3) ஆரியஸ்
(4) நெப்போலியன் (5) பிளேவியன்

**37.** பின்வரும் கூற்றுகளைக் கருதுக.

A - பிளாவிக் கோத்திர மக்களுக்கு புனித பொனிபஸ் எழுத்துத் தொகுதி ஒன்றை அறிமுகம் செய்தார்.
B - சிஸ்டர் சீயன் துறவறசபை மெலேஸ்மாவின் துறவியான றொபட் என்பவரால் ஆரம்பிக்கப்பட்டது.
C - ஜெர்மனியின் திருத்தூதராகப் புனித பொனிபஸ் அறிமுகம் செய்யப்பட்டார்.
D - மேற்குப் பேரரசின் வீழ்ச்சி மேற்குத் திருச்சபையின் வளர்ச்சிக்குக் காரணமாகியது.
E - கொன்ஸ்தாந்திநோபிளின் பிதாப்பிதாவாகிய கமல்டோஸ் சபைக்கெதிராக குற்றச்சாட்டுகளை முன்வைத்தார்.

இவற்றுள் சரியான கூற்றுகளாவன

(1) A யும் B யும் (2) B யும் C யும் (3) C யும் D யும் (4) C யும் E யும் (5) D யும் E யும்

**38.** பன்னிரண்டாம் நூற்றாண்டில் ஏற்பட்ட முதலாவது சிலுவைப் போரில் திருச்சபைக்கு உரிமையாக்கிக் கொள்ள முடிந்தது

(1) உரோமையை ஆகும். (2) பரிஸ் பல்கலைக்கழகத்தை ஆகும்.
(3) கொன்ஸ்தாந்திநோபிளை ஆகும். (4) எருசலேமை ஆகும்.
(5) விட்டென்பர்க் பல்கலைக்கழகத்தை ஆகும்.

**39.** பதின்மூன்றாம் நூற்றாண்டில் ஆரம்பிக்கப்பட்ட பிரான்சிஸ்கன் துறவற சபையிலிருந்து தோன்றிய சபை

(1) வின்சென்சியன் சபை. (2) அன்பின் கன்னியர் சபை.
(3) கப்புச்சின் சபை. (4) கார்மேல் சபை.
(5) திருச்சிலுவைக் கன்னியர் சபை.

**40.** சீர்திருத்த சபைகளின் போதனைகளுக்குப் பதிலளிப்பதற்காகவும் கத்தோலிக்க திருச்சபையின் உறுதித் தன்மையை மேம்படுத்திக் கொள்வதற்காகவும் 1545இல்

(1) துறவற சபைகள் ஆரம்பிக்கப்பட்டன.
(2) வெஸ்லி சகோதரர்கள் இருவரால் செயற்றிறனான சபையொன்று ஆரம்பிக்கப்பட்டது.
(3) கல்சிடோன் பொதுச்சங்கம் கூட்டப்பட்டது.
(4) திரிதெந்தின் பொதுச்சங்கம் கூட்டப்பட்டது.
(5) பல்கலைக்கழகங்களுக்கு அருகாமையில் கார்மேல் துறவற மடங்கள் உருவாக்கப்பட்டன.

**41.** எதிர்கால உலகிற்கு ஏற்றவாறு திருச்சபைக்குப் புத்துயிரூட்டலும் இற்றைப்படுத்தலும் தேவையென்பதில் கவனம் செலுத்திய திருத்தந்தை யார்?

(1) திருத்தந்தை XXIII ஆம் அருளப்பர்
(2) திருத்தந்தை II ஆம் அருளப்பர் சின்னப்பர்
(3) திருத்தந்தை VI ஆம் சின்னப்பர்
(4) திருத்தந்தை XII ஆம் கிரகோரியார்
(5) திருத்தந்தை XIII ஆம் சிங்கராயர்

**42.** இரண்டாம் வத்திக்கான் சங்கத்தின் தீர்மானங்களும் கட்டளைகளும் முதன்முதலாகப் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியது

(1) மறைத்தூதுப் பணிகளிலாகும். (2) திருவழிபாட்டிலாகும்.
(3) துறவற வாழ்க்கையிலாகும். (4) குருத்துவ வாழ்விலும் பணிகளிலுமாகும்.
(5) இறை வெளிப்பாட்டிலாகும்.

[பக் 6 ஐப் பார்க்க

**43.** ஜோன் த விலா டீ கொன்தே அடிகளாரின் தலைமையில் கி.பி. 1543 இல் இலங்கைக்கு வருகை தந்த மறைபோதகர் குழுவினர்
(1) பிரான்சிஸ்கன் சபையினர் (2) இயேசு சபையினர்
(3) டொமினிக்கன் சபையினர் (4) அகுஸ்தினார் சபையினர்
(5) அமலோற்பவ மரிய தியாகிகள் சபையினர்

**44.** கோட்டை அரசனின் அனுமதியுடன் கொழும்பில் வணிகப் பண்டகசாலை ஒன்றை அமைத்து அதனருகில் சிறிய தேவாலயம் ஒன்றைக் கட்டுவிக்க ஒழுங்கு செய்தவர்
(1) பிராசிஸ்கோ த அல்மேதா (2) ஜோன் டி விலா (3) அந்தோனியோ
(4) லொறன் சோ த அல்மேதா (5) கொன்சாலோ

**45.** இலங்கையில் போர்த்துக்கேயரின் மறை பரப்பல் பணியின் **குறைபாடாக** எதனைக் குறிப்பிடலாம்?
(1) உள்நாட்டுக் குருக்களைப் பயிற்றுவிக்காமை
(2) சமய நூல்களை வெளியிடாமை
(3) மக்களுக்கான சேவைகள் கவர்ச்சிகரமற்றதாய் காணப்பட்டமை
(4) போர்த்துக்கலின் அனுசரணை கிடைக்காமை
(5) அரசியல் அதிகாரத்திற்குக் கீழ்ப்படியாமை

**46.** ஒல்லாந்து, ஸ்பெயின் ஆதிக்கத்திலிருந்து மீண்டு ஐரோப்பாவில் வல்லமைமிக்க நாடாகக் காரணமாயமைந்தது
(1) சமயச் செயற்பாடுகளுக்கு முதலிடம் வழங்கியமையாகும்.
(2) போர்த்துக்கலுடன் தொடர்பு கொண்டமையாகும்.
(3) கிழக்கிந்திய வர்த்தகக் கம்பனி நிறுவப்பட்டமையாகும்.
(4) வெளிநாட்டுக் குருக்களின் ஒத்துழைப்பு கிடைத்தமையாகும்.
(5) ‘மக்னா’ காட்டா ஒப்பந்தம் செய்யப்படுத்தப்பட்டமையாகும்.

**47.** இலங்கை கத்தோலிக்க இலக்கியத்தின் தந்தையாகக் கருதப்படுபவர்
(1) அருட்பணி பெட்ரோ பெராரோ அடிகளார்
(2) அருட்பணி ஜோசப் கர்வல்லோ அடிகளார்
(3) அருட்பணி யாக்கோமே கொன்சால்வேஸ் அடிகளார்
(4) அருட்பணி பேதுரு டி சல்தேனா அடிகளார்
(5) அருட்பணி ஜோசப் டி யேசுமரி அடிகளார்

**48.** கி.பி. 1658 இல் ஒல்லாந்து இராணுவத்திற்குப் பொறுப்பாகப் பணியாற்றுவதற்காக இலங்கைக்கு வருகைதந்து, காலியில் ஒல்லாந்துப் படையினரின் சமயப் பணிகளுக்குப் பொறுப்பாகச் செயற்பட்டவர்
(1) அருட்பணி கிறிஸ்தோப்பர் பொன்ஜீன் அடிகளார்
(2) அருட்பணி ஜோசப் மேரி பிராவி அடிகளார்
(3) அருட்பணி ஜோன் ஸ்டீபன் செமேரியா அடிகளார்
(4) அருட்பணி பிலிப் பல்தேயுஸ் பாதிரியார்
(5) அருட்பணி ஜோண் ஸ்டீவன் பாதிரியார்

**49.** இறை சாயலினதும் மனித மாண்பினதும் பண்புகளாவன
(1) கீழ்ப்படிதலும் தாழ்மையும் ஆகும். (2) அறிவாற்றலும் ஞானமும் ஆகும்.
(3) அன்பும் இரக்கமும் ஆகும். (4) தியாகமும் பரிவும் ஆகும்.
(5) தேவபயமும் அறிவூட்டலும் ஆகும்.

**50.** புனித பவுல் 1 கொரிந்தியர் 1:10-13 பகுதியில் எதனைப் பற்றி எடுத்துக்கூறுகிறார்?
(1) தூதுரைப் பணியின் தேவை
(2) தாழ்மை, கீழ்ப்படிதல்
(3) திருச்சபையின் ஒருமைப்பாட்டின் தேவை
(4) மேய்ப்புப் பணியின் பெறுமதி
(5) செபித்தல்

* * *

නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2020
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2020
General Certificate of Education (Adv. Level) Examination, 2020

ක්‍රිස්තියානි ධර්මය II
கிறிஸ்தவம் II
Christianity II

43 T II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
*Three hours*

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

**வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.**

**அறிவுறுத்தல்கள் :**

※ பகுதி **I** இலிருந்து **இரண்டு** வினாக்களையும் பகுதி **II** இலிருந்து **மூன்று** வினாக்களையும் தெரிவுசெய்து **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.

## பகுதி I

**1.** (i) ஐந்நூலுக்குரிய வேறு **இரண்டு** பெயர்களை எழுதுக. (02 புள்ளிகள்)

(ii) திருவிவிலியத்தின் பின்னணி பற்றி ஆழமான ஆராய்ச்சியில் ஈடுபட்ட லூதரன் சபையைச் சேர்ந்த ஜேர்மனிய இனத்தவர்களான அறிஞர்கள் பலர் ஐந்நூலின் ஆசிரியத்துவம் மேசேக்குக் கொடுக்கப்பட்டதையிட்டு வினா எழுப்பினர். அவர்கள் முன்வைத்த முரண்பாடான கருத்துக்கள் **இரண்டினைக்** குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(iii) தொடக்கநூலின் முதல் பதினொரு அதிகாரங்களையும் கற்கும்போது கவனம் செலுத்த வேண்டிய விடயங்கள் **மூன்றினை** விவரிக்குக. (06 புள்ளிகள்)

(iv) இணைச்சட்ட பாரம்பரியத்தின் (Deutteronomical tradition) மூலம் முன்வைக்கப்படும் கருப்பொருள்களையும் மறையுண்மைகளையும் **நான்கு** விடயங்களை அடிப்படையாகக் கொண்டு விவரிக்குக. (08 புள்ளிகள்)

**2.** (i) சமநோக்கு நற்செய்தியின் பிரச்சினை பற்றி **இரண்டு** விடயங்கள் தருக. (02 புள்ளிகள்)

(ii) சமநோக்கு நற்செய்திகளுக்கிடையே காணக்கூடிய ஒற்றுமைகள் **இரண்டினை** உதாரணங்களுடன் விவரிக்குக. (04 புள்ளிகள்)

(iii) சமநோக்கு நற்செய்திக்கும் யோவான் நற்செய்திக்கும் இடையேயுள்ள வேற்றுமைகள் **மூன்றினை** உதாரணங்களுடன் விவரிக்குக. (06 புள்ளிகள்)

(iv) மறையைப் பரப்புவதற்காக புனித பவுல் ஆற்றிய பணிகள் **நான்கினைக்** குறிப்பிட்டு, அவற்றை முன்னெடுத்துச் செல்வதற்காக உம்மால் ஆற்றக்கூடிய செயற்பாடுகள் **நான்கினை** உதாரணங்களுடன் விளக்குக. (08 புள்ளிகள்)

**3.** (i) எருசலேம் பொதுச் சங்கத்தில் புனித பேதுரு உரத்த குரலில் பேசி எதனை விளக்கினார்? (02 புள்ளிகள்)

(ii) தர்க்கவியலாளர்களான அப்போலோஜிஸ்த எழுத்தாளர்களை அறிமுகம்செய்து, அவர்களின் ஆக்கங்களின் பொது நோக்கங்கள் **இரண்டினையும்** எழுதுக. (04 புள்ளிகள்)

(iii) பேரரசன் வலேரியனின் காலத்தில் (கி.பி. 254 - 260 வரை) கிறிஸ்தவர்கள் முகம்கொடுத்த துன்பங்கள் **மூன்றினை** விவரிக்குக. (06 புள்ளிகள்)

(iv) இன்றைய சமுதாயத்தில் நடைமுறைப்படுத்தக்கூடிய, ஆரம்பத் திருச்சபையில் காணப்பட்ட பண்புகள் **நான்கினைக்** குறிப்பிட்டு, அப்பண்புகளை தற்காலத்தில் நடைமுறைப்படுத்த முற்படும்போது முகங்கொடுக்க நேரிடும் சவால்களை விளக்குக. (08 புள்ளிகள்)

[பக் 2 ஐப் பார்க்க.

## பகுதி II

4. (i) திருவிவிலியத்தில் குறிப்பிட்டுள்ளவாறு படைப்பு தொடர்பான முதற்கதையில், முதல் ஐந்து நாட்களில் படைக்கப்பட்டவற்றை ஒழுங்கு முறைப்படி விவரிக்குக. (10 புள்ளிகள்)

(ii) மேலே (i) இலுள்ள கதையில் குறிப்பிட்டுள்ளவாறு, மனிதனுக்குக் கொடுக்கப்பட்ட பொறுப்புக்களைக் குறிப்பிட்டு, உமது வாழ்வில் அவை எவ்வாறு நிறைவு செய்யப்படுகின்றன என்பதை **நான்கு** விடயங்களை அடிப்படையாகக் கொண்டு விளக்குக. (10 புள்ளிகள்)

5. (i) திருவிவிலியத்தில் திருப்பாடல்களிலுள்ள அனைத்து பாடல்களையும் ஏழு காரணிகளை அடிப்படையாகக் கொண்டு வகைப்படுத்தலாம். அவற்றில் **ஐந்தினைக்** குறிப்பிட்டு, விவரிக்குக. (10 புள்ளிகள்)

(ii) திருப்பாடல்களில் 23 ஆவது திருப்பாடலைச் சுருக்கமாக எழுதி, அதனை அடிப்படையாகக் கொண்டு கிறிஸ்துவுக்கும் உமக்கும் இடையிலான தொடர்பை **ஐந்து** காரணிகளை அடிப்படையாகக் கொண்டு விளக்குக. (10 புள்ளிகள்)

6. (i) புனித மத்தேயு முன்வைக்கும் திருச்சபைப் பொழிவில் அதிகாரம் பற்றிய போதனையில் அடங்கியுள்ள விடங்கள் **ஐந்தினை** விளக்குக. (10 புள்ளிகள்)

(ii) ஏதேனுமொரு மக்கள் குழுவிற்குத் தலைமை தாங்கத்தக்க விதத்தில் உம்மில் காணப்பட வேண்டிய பண்புகள் **ஐந்தினை** விளக்குக. (10 புள்ளிகள்)

7. (i) ஆறாம் நூற்றாண்டில் நிலவிய கிறிஸ்தவ திருச்சபையின் பண்புகள் **ஐந்தினை** விவரிக்குக. (10 புள்ளிகள்)

(ii) தேசிய ஒற்றுமையையும் சமயங்களுக்கிடையிலான ஒருமைப்பாட்டையும் கட்டியெழுப்புவதில் நீர் எவ்வாறு பங்குகொள்வீர் என்பதை **ஐந்து** காரணிகளினூடாக விளக்குக. (10 புள்ளிகள்)

8. (i) சுதந்திரத்திற்குப் பிற்பட்ட காலத்தில் இலங்கையின் முன்னேற்றத்திற்காக கத்தோலிக்கத் திருச்சபை ஆற்றிய பணிகள் **ஐந்தினை** விவரிக்குக. (10 புள்ளிகள்)

(ii) புனித யோசப்வாஸ் அடிகளாரின் வாழ்க்கையை முன்மாதிரியாகக் கொண்டு இளைஞர், யுவதியராக சமுதாயத்தில் நீர் எவ்வாறு செயற்படுவீர் என்பதை **ஐந்து** காரணிகளை அடிப்படையாகக் கொண்டு விளக்குக. (10 புள்ளிகள்)

* * *